# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2038
மார்கழி - டிசம்பர் 2007




சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :


*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227


ஆதீன இணையதள முகவரி :

website : www.kundrakudiadheenam.org.

ஆசிரியர்

**மரு. பரமகுரு**


அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2038 (சர்வசித்து) மாதம் : மார்கழி
மலர் : 21 இதழ் : 12



# கருப்பு மனங்களை வெள்ளைப்படுத்துவதே கல்வி

தில்லி பள்ளி ஒன்றில் நெஞ்சை உறையவைக்கும் சம்பவம்! தில்லி அருகே உள்ள குர்கான் நகரில் யுரோ என்ற சர்வதேசப் பள்ளியில் அபிசேக் தியாகி என்ற எட்டாம்வகுப்பு மாணவரை அப்பள்ளியில் பயிலும் முகேஷ், ராகேஷ் என்ற இரண்டு மாணவர்கள் துப்பாக்கியால் வெறித்தனமாகச் சுட்டுக் கொன்றார்கள். நான்கைந்து குண்டுகள் உடலைத் துளைத்த நிலையில் அபிசேக் தியாகி அந்த இடத்திலேயே பிணமாகிப் போனான்! (தினகரன் 12.12.2007 மதுரைப் பதிப்பு முதல்பக்கச் செய்தி). அமெரிக்கா போன்ற நாடுகளில் சாதாரணமாக நடக்கக்கூடிய இது போன்ற கொடிய நிகழ்வு இந்தியாவில் நடந்துள்ளது நம்ப முடியாது நம்மை அதிர்ச்சியில் உறையவைத்துள்ளது. கல்விக் கூடமா? கொலைக்கூடமா? நம் நாட்டின் கல்வித்திட்டம் இந்தப் பிஞ்சு மழலைகளுக்கு எதைப் போதித்துள்ளது?

பூவின் இதழ்க் கதவுகள் மெல்லத் திறப்பதைப்போல மௌனமாய், மென்மையாய் போதிக்கவேண்டிய கல்வி வன்மையை ஏன் வளர்த்து வருகின்றது? வார்த்தைகளைத்

தாங்குவதில் வல்லமை இல்லாதவர்கள் வாழ்க்கையில் எதைச் சாதிக்கப் போகின்றார்கள்?

நல்லதோர் வீணை செய்தே அதை
நலம்கெட புழுதியில் எறிவதுண்டோ!

– என்ற பாரதி கேட்ட அவலம்

தொடர்கதையாய் தொடர்கின்றதோ? சூறைக் காற்றில் வீழ்ந்து விடுகின்ற மண்ணில் பிடிப்பற்ற வேரற்ற மரங்களைப் போல வாழ்க்கைப் புயலில் வீழ்ந்து விடுகின்ற கோழை மனிதர்களைத் தான் கல்வி உலகம் உற்பத்தி செய்கின்றதா?

தேடிச் சோறு நிதம் தின்று
பல சின்னஞ்சிறு கதைகள் பேசும்
வேடிக்கை மனிதர்களைப் போல்
வீழும் கூட்டம் ஒருபுறம்!

கொலைகள், தற்கொலைகள், போதைப்பழக்க வழக்கங்களுக்கு அடிமையாதல், எப்படியேனும் வாழ்தல் என்று வாழ்க்கைத் தடம் பிறழ்வதற்கு யார் காரணம்? இப்படி அடுக்கடுக்காய்ப் பல வினாக்கள் நம் மனதைச் சல்லடை போட்டு துளைத்துக் கொண்டிருக்கின்றன! காயம்பட்ட மனத்தின் குரூர வெளிப்பாடுதான் கொலைவெறித் தாக்குதல்! மனக்காயம்பட்ட மாணவன் தன் ரணத்தை, வேதனையை, துன்பத்தை ஆசிரியரிடம் கூறியிருக்கலாம். அப்படிப்பட்ட சூழலில் ஆசிரியர் புண்பட்ட மாணவனின் மனத்தைப் பண்படுத்தி இருக்கலாம். இப்படிப்பட்ட வாய்ப்புகள் இன்று கல்விக்கூடங்களில் இருப்பதாகத் தெரியவில்லை! ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் பெரிய இடைவெளி! கருவிகள் வழியே பெரும்பாலும் கற்றல் பணிகள்

நடைபெறுவதால், ஆசிரியர்கள் பெரும்பாலும் கருவிகளாகவே மாறிவிடுகின்றார்கள். உடலாலோ, மனத்தாலோ மாணவன் வாடி இருந்தால் முன்பு ஆசிரியர் அடையாளம் கண்டு மாணவன் வாட்டத்தைப் போக்குவார்! கல்வியில் நாட்டத்தை ஏற்படுத்துவார்! இன்று கல்வி வணிகச் சந்தைக்கு வந்த பிறகு மனித மனங்களைப் பற்றிக் கவலைப்படாமல் பணங்களைப் பற்றிக் கவலைப்படுவதாகக் கல்வி உலகம் அமைந்துள்ளது!

ஆசிரியர் – மாணவர் உறவு இன்று வேலியில்லா நிலம் போல், கரையில்லா நதியைப்போல அர்த்தமற்றதாய்ப் போய்விட்டது! வீட்டின் சூழல் எப்படி உள்ளது? மனத்தால் காயம்பட்ட மாணவன் வீட்டில் தன் துன்பத்தைப் பெற்றோரிடம் சொல்ல வாய்ப்பு இருக்கின்றதா? அப்படி வாய்ப்பிருந்திருந்தால் வரலாற்றில் கறைபடிந்த ஒரு படுகொலை தடுக்கபட்டிருக்கும். பெற்றோரின் அரவணைப்பும் ஆறுதலும் இல்லாத குழந்தைகள் வன்முறையாளர்களாக மாறிவருகின்றனர். நோயிலிருந்து மீள்வது என்பது நோய் மூலத்தில் இருந்து நம்மை காப்பது.

கல்வி வெளிச்சம் பணம் சம்பாதிக்கக் காட்டும் பாதையைவிட மனிதர்களைப் பண்படுத்தும் பாதைக்கு வழிகாட்ட வேண்டும். வீட்டிலும், பள்ளியிலும் குழந்தைகள் பாசமும், நேசமும் கலந்த பாதுகாப்பு வளையத்தில் பராமரிக்கப்படவேண்டும்! நடக்கும் காடுகள் நந்தவனங்கள் ஆகும்! பாலைகள் பசுஞ்சோலைகளாக மாறும்! கருப்பு மனங்களை வெள்ளையாக்குவதே கல்வி! அந்தத் திசை நோக்கிக் கல்வி உலகம் பயணம் செய்வதே இன்றைய காலத்தின் தேவையாகும்.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## 82. தீ நட்பு

தலை சிறந்த நட்பாகிய பழைமையை விளக்கியவர் அதற்று நேர் எதிர் முறையான தீ நட்பை விளக்குகின்ற அதிகாரம் இது. கொள்ள வேண்டியதை முதலில் கூறி, அதன் பின் விலக்க வேண்டியதைக் கூறுவதே அறிவியல் மரபு. ஏன் எனில் நல்லதை அடையும் முயற்சியிலேயே தீமை விலகும்.

பொறுத்துக்கொள்ள இயலாத குற்றமுடையவர்களுடைய நட்பு ஆகாது. குற்றங்களாவன: திருந்த விரும்பாமை, கள்ளுண்ணல், வஞ்சித்து ஒழுகுதல், சோம்பித் திரிதல் முதலியன.

குற்றங்கள் உடையார் நட்பு ஆகாதென்றமையால் குறைகள் உடையார் நட்பு ஆகும் என்றாயிற்று.

*பருகுவார் போலினும் பண்புஇலார் கேண்மை*
*பெருகலின் குன்றல் இனிது.* (811)

அனுபவிக்கத்தக்க காதல் நட்புடையராயினும் பண்பில்லாதவர்களுடைய நட்பு வளர்தலிலும் குன்றுதல் இன்பந்தரும்.

நட்புக்கு இன்றியமையாதது தூய அன்பு. ஆயினும் பண்புள்ள இடத்தில்தான் நட்பு பயன்தரும். ஆதலால் பண்பிலார் தொடர்பு வேண்டாம் என்றார்.

*உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை*
*பெறினும் இழப்பினும் என் .* (812)

தனக்குப் பயனுள்ளபோது நட்புச் செய்தும் தனக்குப் பயனில் வழி நட்பிலிருந்து விலகியும் செல்வோர் நட்பு இருந்து என்ன பயன்? இழக்கும் போது என்ன கேடு வந்துவிடப் போகிறது?

*உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது*
*கொள்வாரும் கள்வரும் நேர்.* (813)

நட்பின் வழிவரும் பயன்பற்றிய அளவு பார்ப்போர் நட்பும், கொடுப்பவரைப் பற்றிக் கருதாது அவர் தரும் பொருளையே கருதும் விலைமாதும், களவு செய்பவரும் ஒரே தன்மையுடையவர்கள்.

நட்பு, நட்புக்காகவேயாம். பயன் கருதிய நட்பு, நன்மை பயவாது. விலைமாது பெறுவதற்கே உரியவள். அவள் பொருள் தருப்வனுக்கு யாதொன்றும் கொடுக்கமாட்டாள். "கள்வர்" நம்பிக்கைக்குரியரல்லர்.

*அமரகத்து ஆற்றுஅறுக்கும் கல்லாமா அன்னார்*
*தமரின் தனிமை தலை.* (814)

செருகளத்தில் சுமக்காது தரையில் விழும் அறிவிலாக் குதிரைகளைப் போன்றவர்களின் நட்பைவிடத் தனிமை இனியது.

*செய்துஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை*
*எய்தலின் எய்தாமை நன்று.* (815)

நட்புச் செய்து வைத்தாலும் தமக்கு அரணாக அமையாதவர்களின் நட்பு உண்டாகித்தான் என்ன பயன்? இல்லாமல் போனால்தான் என்ன குறை?

நட்பின் பயன் நாட்டாருக்கு அரணாக விளங்குவதே என்று உணர்த்தியது.

*பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்*
*ஏதின்மை கோடி உறும்.* (816)

அறிவில்லாதவருடன் பெரிய அளவில் கலந்து பழகிய நட்பினும் அறிவுடையவர்களின் பகை கோடி மடங்கு நன்று.

*நகைவகையர் ஆகிய நட்பின் பகைவரால்*
*பத்துஅடுத்த கோடி உறும்.* (817)

நகைத்தலுக்குரிய தூர்த்தரின் நட்பினால் வருங்கேடு, பகைவர் தரும் கேட்டைவிடப் பலகோடி மடங்கு பெரியது.

*ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை*
*சொல்ஆடார் சோர விடல்.* (818)

தம்மால் செய்து முடிக்கக்கூடிய கடமையினைச் செய்து முடித்தற்கு இயலாததாகச் சோர்ந்து பணியைக் கைவிட்டு உழல்வாரைக் காணின் அவர்களிடம் யாதொன்றும் கூறாது கைவிடுக.

செய்யமுடிந்ததைச் செய்யாது விடுபவர் சோம்பேறிகள். சோம்பேறிகளால் என்றும் எதுவும் நடக்காது. கெட்டவர்களை விடச் சோம்பேறிகள் மோசமானவர்கள். ஆதலால் "சோர விடுக" என்றார்.

*கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு*
*சொல்வேறு பட்டார் தொடர்பு.* (819)

சொல்லுக்கும் செயலுக்கும் வேறுபட்டு நிற்பார் உறவு கனவிலும் கூடத் தீயது.

கனவிலும் தீயது என்று கூறியதால் நனவில் தீயது என்று உணர்த்தியதாக உணர்க.

*எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ*
*மன்றிற் பழிப்பார் தொடர்பு* (820)

வீட்டின்கண் பழகுதலும் பலர் கூடிய மன்றத்தில் பழித்தலும் உடையார் தொடர்பு எந்த அளவிலும் வேண்டாம். கைவிடுக.

சிறந்த நட்பு வெளிப்படும் இடம் மனையல்ல; பலர் கூடும் அவையே என்பது உணர்த்தியது. பழித்தல் மனையிலும் பலரறியப் பாராட்டுதல் மன்றிலும் நிகழ்தல் அறம்; சிறப்பு.

*(தொடரும்)*

வினை இயற்றாமல் இருத்தல் கூடாது. வினைகள் இயற்றாமல் போனால் ஆன்மா வளராது; பக்குவப்படாது. குற்றங்களிலிருந்து விடுதலை பெறாது. வாழ்க்கையில் தேக்கம் ஏற்பட்டுவிடும். அதுவும் ஒருவிதத்தில் குற்றமேயாம்! ஆதலால் வினைகள் இயற்றி வாழ்தல் வேண்டும். செய்யும் வினைகள் - காரியங்கள் தற்சார்பாக அமையாமல் பொதுமை அடிப்படை காரணமாக அமைய வேண்டும்! புவியை நடத்தும் வினைகள் இயற்றுதல் - நடத்துதல் வேண்டும். அதேபோழ்து பொதுவில் நடத்துதல் வேண்டும். செய்யும் வினைகளின் பயனை அவ்வப்பொழுது கணக்குப் பார்த்து நேர்செய்தல் வேண்டும்.

**- அருள்நெறித்தந்தை**

திருத்தம் : அக்டோபர் இதழ் பக்கம் 27இல் வெளியாகியுள்ள கவிஞர் கா. வேழவேந்தன் கவிதைத் தலைப்பு "பொல்லா உலகம்" என்று தவறாக அச்சாகியுள்ளது. "தமிழரின் தனிப்பெருமை" என்று திருத்திப் படிக்க வேண்டுகிறோம்.

- ஆசிரியர்

# காவி உடையில் ஓர் அமைதிப் புயல்

("கிழக்குவாசல்" இதழுக்காக தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் வழங்கிய நேர்காணல் செய்தி)

ஒரு முற்பகல் நேரத்தில் நிசப்தம் சூழ்ந்திருந்த குன்றக்குடி திருமடத்தில் இப்போதைய மடாதிபதி தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களை "**கிழக்குவாசல்**" இதழுக்காக சந்தித்தோம்.

எங்களை அன்பு ததும்ப அவர் வரவேற்ற விதம், எந்தக் கேள்வி கேட்டாலும் கொஞ்சம் கூட தாமதிக்காமல் மிகத் தெளிவாக பதில் சொன்ன நேர்த்தி, ஒவ்வொரு பதிலிலும் வெளிப்பட்ட இந்த சமூகத்தின் மீதான அக்கறை இவற்றையெல்லாம் கண்டு வியந்த எங்களுக்கு விண்ணில் தேவனை மட்டுமே தேடாமல், மண்ணில் மனிதர்களை நேசித்த, மனித நேய மாமுனிவரான மறைந்த தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களே மீண்டும் இளமைத் துடிப்போடு வந்து அமர்ந்திருப்பதாக தோன்றியது.

ஒருவித தயக்கமும் யோசிப்புமாய் அடிகளார் அவர்களிடம் பேச ஆரம்பித்தோம்.

**✪ ஆன்மீகம்... ஆன்மீகம் என்று சொல்கிறோமே... அப்படியென்றால் என்ன?**

(மெல்ல சிரித்தபடி) ஆன்மீகம் என்பது ஒருவித உளவியல் மேம்பாடு. மனிதன் உட்பட எல்லா உயிரினங்களுமே உயிர் வாழ்தல் பொருட்டு சுவாசிக்கின்றன; உண்ணுகின்றன. இது உயிரினங்களுக்குப் பொதுவான குணம். ஆனால் மனிதன் மட்டுமே சிந்திக்கப் பிறந்தவன். அந்தச் சிந்தனையின் விளைவாக அவன் பல்வேறு மன உணர்வுகளுக்கு ஆளாகின்றான். அவற்றை முறைப்படுத்தவேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. ஒரு மனிதனின் மனதிற்குள் இருவேறு குணங்கள் ஒளிந்திருக்கின்றன. ஒரு நேரத்தில் தவறு செய்கின்ற அதே மனிதன் இன்னொரு தருணத்தில் யாரும் எதிர்பாராத விதமாக நன்மை செய்கிறான். இந்த முரண்பட்ட இருகுணங்களும் அவனுக்குள்ளேயே மறைந்திருக்கின்றன.

இவற்றில் பிறருக்கு நன்மை செய்வது... தீங்கிழைக்காமல் இருப்பது... நான் வாழ்வது நாமும் வாழ்வது.... என்பது போன்ற நல்ல குணங்களை வளர்த்தெடுப்பதும், மனித வாழ்வைச் செம்மைப் படுத்துவதும் தான் ஆன்மீகம்.

இப்படியான ஆன்மீகத்தைச் சடங்குகளாலும் அடையாளங்களாலும் வளர்ந்து கொண்டிருக்கக்கூடிய உலகம் வகைப்படுத்தி வைத்திருக்கிறது.

✪ ஆன்மீகமும் தியாகமும் ஒன்றா...?

இல்லை. ஆன்மீகம் என்பது தன்னை நெறிப்படுத்திக்கொள்வது. அது ஒரு தவறிழைக்காத வாழ்க்கை முறை. அது இயல்பானது. யார் ஒருவராலும் அப்படி வாழ முடியும். தியாகம் என்பது தன் இயல்பான வாழ்க்கை நலனை மற்றவருக்காக அல்லது ஏதோ ஒரு காரணத்திற்காக விட்டுக்கொடுப்பது.

✪ எங்களுக்கு நீண்ட நாட்களாக ஒரு சந்தேகம். ஆறாவது அறிவைக் கூடுதலாகப் பெற்றிருக்கும் மனிதன் மற்ற உயிரினங் களை விட மேலானவனாகத்தானே இருக்க வேண்டும். ஆனால் இந்த உலகில் நடக்கும் எல்லாப் பிரச்சனைகளுக்கும், சச்சரவுகளுக்கும் மனிதன்தானே காரணமாக இருக்கிறான். மற்ற உயிரினங்களால் எந்தத் தொல்லையும் இல்லையே... ஏன் அப்படி?

பௌதீக வாழ்க்கையில் அதாவது யதார்த்த வாழ்க்கையில் மனிதன் தன் சுகங்களைக், நுகர்வுக் கலாச்சாரங்களை தன் ஆறாவது அறிவின் மூலம் மிகப்பெரும் அளவில் பெருக்கியிருக்கிறான். அதாவது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த மனிதனுக்குக் கிடைத்ததைவிட இப்போது வாழும் மனிதனுக்கான வாழ்க்கை வசதிகள் எத்தனையோ மடங்கு பிரமாண்டமாய் வளர்ந்திருக்கின்றன. அப்போது பொதுக் குளத்தில் தண்ணீர் எடுத்த மனிதன் இப்போது ஆழ்குழாய் கிணறு மூலம் வீட்டிற்குள்ளேயே தண்ணீர் எடுக்கிறான். இப்படி வரிசையாக உதாரணங்கள் சொல்லலாம். இவையெல்லாம் ஆறாவது அறிவு மனிதனுக்கு உண்டாக்கித் தந்த வாய்ப்பு வசதிகள்.

ஆனால் மற்ற உயிரினங்கள் அப்படியில்லையே! அவற்றின் பரிணாம வளர்ச்சி ஓரளவிற்கு உச்சம் பெற்று அப்படியே நின்றுவிட்டது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்த குரங்கு எப்படி மரத்திற்கு மரம் தாவியதோ... அதுபோலத்தானே இப்போதிருக்கும் குரங்கும் செய்துகொண்டிருக்கிறது. ஆறாவது அறிவு இல்லாததே இந்தத் தேக்க நிலைக்குக் காரணம்.

என்ன ஒன்று... தன் வாழ்க்கை வசதிகளை எல்லையில்லாமல் வளர்த்துக் கொண்டேயிருக்கும் மனிதன், விசாலப்படுத்த வேண்டிய தன் மனத்தை மட்டும் சுருக்கிக் கொண்டேயிருக்கிறான். அதுதான் எல்லாப் பிரச்சனைகளுக்கும் மூலகாரணம். இப்படி சுருங்கிக் கொண்டிருக்கும் மனத்தை விசாலப்படுத்தி மூண்டெழுகின்ற பிரச்சனைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க முயற்சிப்பதுதான் ஆன்மீகத்தின் பணி.

✪ இதைவிட அருமையாக சொல்ல முடியாது. ரொம்ப நாளாக எனக்கு இன்னொரு சந்தேகம்... கேட்கலாமா வேண்டாமா என்று சிறிது தயக்கம்.

(கூர்மையாய் பார்த்தவாறே) எதற்கு தயக்கம்? எதுவாக இருந்தாலும் கேளுங்க.

✪ எங்கு திரும்பினாலும் வழிபடுவதற்கென்று ஏராளமான திருக்கோயில்கள். வழிபடவிரும்புபவர்கள் கோயிலுக்குப் போகப் போகிறார்கள். அதன் பிறகு தங்களதைப் போன்ற திருமடங்களின் தேவை என்ன?

கோயில்கள் என்பது பொதுவழிபாட்டு நிறுவனங்கள். பரம்பொருள் என்பது ஆலயத்திலிருக்கும் படிம வடிவத்தில் இருப்பதாகக் கருதி பொதுமக்கள் பக்தி உணர்வோடு வழிபாடு செய்யும் இடங்கள். மடங்கள் என்பதோ குருமார்கள் தங்கியிருந்து மக்களை நெறிப்படுத்தும் நிறுவனங்கள். அதாவது மக்களை நல்வழிப்படுத்துவதற்காகத் தோன்றிய இடங்கள்.

✪ குன்றக்குடி திருமடம் எப்பொழுது துவங்கப்பட்டது?

இந்தத் திருமடம் எழுநூறு ஆண்டுகால பழமை வாய்ந்தது. இந்த மடத்தின் மூலவர், முதல் ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி தேசிக

பராமாசாரிய சுவாமிகள் ஆவார். நமக்கு முந்தைய அடிகளார் பெருந்தகை 45வது சந்நிதானம்.

✪ மறைந்த குன்றக்குடி அடிகளார் அனைவருக்கும்பிடித்தமானவர். அவரது சிந்தனையும் பேச்சும் செயல்பாடுகளும் மிக அற்புதமானவை. தாங்கள் அவரோடு இணைந்து செயல்பட்ட நாட்கள் எப்படி இருந்தன?

மகா சந்நிதானத்துடன் வாழ்ந்த ஒவ்வொரு நாளுமே "இந்தநாள் இனிய நாள்" போல மறக்க முடியாத நாள்தான். ஒவ்வொரு நாளையும் பொன்னரான நாளாக மாற்றிக் காட்டினார்கள். அதனாலேயே ஒரு பழமொழியையே புதுப்படுத்தி சொல்வார்கள். தன்னெதிரே இருப்பவர்களிடமே காலம் பொன் போன்றதா என்று கேட்பார்கள். "ஆம்" என்றே பதில் கிடைக்கும். அடிகளார் சொல்வார்கள் "தவறு காலம் பொன்னைவிட மேலானது. இழந்த பொன்னை வாங்கிவிடலாம். இழந்த காலத்தை வாங்கிவிட முடியாது" என்று. இப்படி தன்வாழ்நாள் முழுவதும் இந்த சமூகத்திற்கு அரும்பணியாற்றுவதிலும் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதிலும் பிறரைத் தன் பாதைக்கு அழைத்து வருவதுமாக... அவர்கள் செய்த பணி மகத்தானது.

அவர்களைப் பற்றிச் சொல்வது என்பது அத்தனை சுலபம் அல்ல. ஒரு பெரிய இதிகாசத்தில் எந்தப் பக்கத்தை எடுத்து வாசிப்பது என்பதில் ஏற்படுகின்ற தடுமாற்றம் போல மகாசன்னிதானத்தின் மகத்தான பணிகளை எந்த ஒன்றை எடுத்து சொல்வது? அவர்களுடையது ஒரு வாழ்க்கை அல்ல... வரலாறு! ஒரு ஒப்பற்ற சகாப்தம்!

✪ உண்மைதான். இருந்தாலும் ஏதேனும் ஒரு நிகழ்ச்சியை நினைவுபடுத்தினால் நன்றாக இருக்குமே என்றுதான் கேட்டோம்!.

தாராளமாக சொல்லலாம். இந்த மண்ணில் மதத்தின் பெயரால் ஒருபெரும் கலவரம் நடந்தது. ஏறத்தாழ நவகாளியின் நிலைப்பாடு போலவே அது நிகழ்ந்தது. 1982ல் குமரி மாவட்டத்தில் மண்டைக்காடு என்ற இடத்தில் சமயக்கலவரம் நிகழ்ந்தது. கலவரம் என்று சொல்வதைவிட மதவெறி தீப்பற்றி எறிந்தது என்றே சொல்லலாம். அந்த மிகப்பெரிய துயரமான நிகழ்ச்சியில் அரசாங்கத்தையோ தனக்கு

ஆதரவாக இருப்பவர்களின் துணையையோ அல்லது வேறு எவரையும் எதிர்பார்க்காமல் தன்னந்தனியாக ஏதோ ஒரு தன்னுணர்வு தந்த உந்துதலில் மண்டைக்காடு பகுதிக்குச் சென்றார்கள். காந்தியடிகள் அமைதியைக் கொண்டுவருவதற்காகத் தன் உயிரைப் பொருட் படுத்தாமல் எப்படி நவகாளிக்கு புறப்பட்டுச் சென்றாரோ அதே போல், இருப்பது ஒரு உயிர்தானே... அமைதி திரும்புவதற்காக அது போனால் போகட்டும் என்று புறப்பட்டுச் சென்றார்கள். அது ஒரு மிகக் கடுமையான ஒரு சமாதானப் பணி.

எப்போதுமே நெருப்பைப் பற்ற வைப்பது சுலபம். போரைத் தொடங்குவது எளிது. நிறுத்துவதுதான் கடினம். மதவெறித்தீயை அணைக்கும் கடினமான பணியில் தனது சமயத்தவரையும் மாற்று மதத்தவரையும் அமைதிவழிக்கு கொண்டுவர அரும்பாடுபட்டார்கள். சொந்தச் சமயத்தவர்களோ, மாற்று மதத்தவர்களுக்காக நீங்கள் ஏன் வாதாடுகிறீர்கள், என்று கோபப்பட்டார்கள். எல்லாவித முரண்பாடு களையும் பொறுமையோடு சமாளித்தார்கள்.

இந்தச் சமயத்தில் கட்டாயம் ஒரு நிகழ்ச்சியை குறிப்பிட்டாக வேண்டும். மண்டைக்காடு பகுதியில் கிறித்துவ மீனவர்களால் கடலில் பிடித்து வரப்பட்ட மீன்களை மாற்றுச் சமயத்தவர்கள் வாங்க மறுத்தார்கள். அதன் மூலம் அவர்களுக்கு ஒரு பொருளாதார நெருக்கடியை கொடுக்க வேண்டும் என்பதுதான் அதன் நோக்கம். இதையறிந்த மகாசந்நிதானம் அவர்கள் தான் ஒரு சைவ மடாதிபதியாக இருந்தும் தன்வாழ்நாளில் மீனை ஒருமுறைகூட தொட்டறியாதவராக இருந்தும், கிறித்துவ மீனவர்கள் பிடித்துவந்த மீன்களை கையில் தூக்கிப் பிடித்து, 5 ரூபாய், 10 ரூபாய் என்று ஏலம் போட்டார். இதைப் பார்த்ததும் மனம் பதறிப்போன இந்துசமய மீன் வியாபாரிகள் வாடிக்கையாளர்கள் சாமியே இப்படி செய்கிறாரே... என்று பகை மறந்து இணக்கமாகி மீன்களை வாங்கிச் சென்றனர். இறுக்கமான சூழல் மாறி மெல்லமெல்ல இயல்புநிலை திரும்பியது. இது மகாசந்நிதானம் அவர்களின் நல்ல முயற்சிக்குக் கிடைத்த மகத்தான வெற்றி. இதுபோல ஏராளமாகச் சொல்லலாம்.

✪ குன்றக்குடி பிளான் என்ற புகழ்பெற்ற திட்டம் எப்படி உருவானது?

அது திட்டமிட்டு உருவாக்கப்பட்ட ஒரு முயற்சி அல்ல. யதேச்சையாக நிகழ்ந்த ஒரு முயற்சி. குன்றக்குடிக்கு அருகில் உள்ள, குறட்டி என்ற

ஊரில் குடிசை வீடுகள் திடீர்திடீரெனத் தீப்பற்றி எரிந்தன. அதற்கு என்ன காரணம் என்று யாருக்கும் தெரியவில்லை. அடிகளார் அவர்கள் காரைக்குடியில் உள்ள "சிக்ரி" அமைப்பின் விஞ்ஞானிகளைத் தொடர்புகொண்டு, இப்படி அடிக்கடி தீப்பற்றி எரிய என்ன காரணம் என்று கண்டறிந்து சொல்லுங்கள், என்றார். விஞ்ஞானிகள் தீப்பற்றும் கிராமத்திற்கு சென்றார்கள். ஆராய்ச்சியின் முடிவில் "வெள்ளைப் பாஸ்பரஸ்" என்ற வேதிப்பொருள் கூரையின் மறைவில் வைக்கப்பட்டு வெயில் அதிகரிக்க அதிகரிக்க சூடாகி தீப்பற்றிக் கொள்கிறது என்றார்கள். சொந்த விருப்பு வெறுப்புகளின் காரணமாகச் சிலர் செய்த செயல்களே இவை என்று தெரிய வந்தது.

✪ (சற்று அதிர்ச்சியுடன்) இப்படிக்கூடவா செய்வார்கள்.... பிறகு?

"கூரைக்குமேல் தீப்பிடிக்கும் காரணத்தை கண்டறிந்து சொல்லிவிட்டீர்கள். கூரைக்கு அடியில் இருக்கும் அடுப்புகள் ஏன் இன்னும் எரியவில்லை என்று ஆராய்ந்து சொன்னீர்கள் என்றால் மிகவும் பலனுள்ளதாக இருக்கும்" என்று கேட்டார் அடிகளார். விஞ்ஞானிகள் ஆராய்ந்து சொன்னதன் அடிப்படையில் ஆங்காங்கு சிறுசிறு தொழில்கள் தொடங்கப்பட்டன. எல்லா நிறுவனமும் தனியார் நிறுவனமாக இல்லாமல் கூட்டுறவு நிறுவனமாகவே அமைக்கப்பட்டன. வறுமையை எதிர்க்கும் இந்தச் சிறுதொழில் செயல்திட்டமே நாடாளுமன்றத்தில் குன்றக்குடித் திட்டம் என்று பாராட்டப்பட்டது.

✪ "மக்கள் கல்வி நிறுவனம்" என்ற அமைப்பு இப்போது தங்கள் மூலம் செயல்படுவதாக அறிகிறோம். அதைப்பற்றி...?

தனி மனிதர்களைத் தகுதி உடையவர்களாக ஆக்குவது என்ற நோக்கத்தோடு தொடங்கப்பட்டதுதான் மக்கள் கல்வி நிறுவனம். கிராமப்புறங்களில் உள்ள இளைஞர்கள் பெண்கள் படித்தவர்கள் படிக்காதவர்கள் என்று அனைவரையும் சுயதொழில் செய்வதற்கு முழுமையான பயிற்சி கொடுக்கிறோம். சாதாரணப் படிப்புள் பெண்களைக் கணிப்பொறி இயக்கத் தெரிந்தவர்களாக மாற்றுகிறோம். நாங்கள் இதை ஒரு சேவையாக இலவசமாக கற்றுத் தருகிறோம். நவீன தொழில்நுட்பக் கருவிகளான செல்போன் போன்ற நிறைய கருவிகளைப் பழுது பார்க்க கற்றுத் தருகிறோம். சுமார் 8 ஆண்டுகளாக இந்தப் பணி நடைபெறுகிறது. இதற்கு நல்ல வரவேற்பும் பலனும் இருக்கிறது.

✪ புதிதாக தொடங்கப்பட்டுள்ள வேளாண் அறிவியல் மையம் மூலம் என்னவெல்லாம் செய்கிறீர்கள்...

விவசாயம், தோட்டக்கலைத் தொழில் கால்நடை வளர்ப்பு ஆகியவற்றின் தொழில்நுட்ப வளர்ச்சிக்கான ஏற்பாடுகளை இந்த வேளாண்மை அறிவியல் மையம் மூலமாகச் செய்து வருகிறோம். இந்த மாவட்டத்தை வேளாண்மையும் கால்நடை வளர்ப்பும் தொழில்நுட்ப வளர்ச்சியும் நிறைந்த மாவட்டமாக உருவாக்குவதுதான் இதன் நோக்கம்.

முதலில் குன்றக்குடி கிராம அளவில் இருந்த சேவைப் பணிகளை இப்பொழுது மாவட்ட அளவில் விரிவுபடுத்தியிருக்கிறோம். விவசாயக் கூலியைத் தவிர வேறு வாய்ப்பில்லாத கிராமப்புறங்களில் 80% பெண்கள் தங்கள் கல்வி அறிவை வளர்த்துக் கொள்ளவும், தொழில் நுட்பத்திறனைப் பெருக்கிக் கொள்ளவும் இந்தத் திட்டம் உதவியாக இருக்கிறது.

✪ உலகில் வாழும் 600 கோடி பேரும் 600 கோடி விதமாக இருக்கிறார்கள். ஒரு எள்முனை அளவாவது ஒவ்வொருவருக்கும் வேறுபாடு உள்ளது. அது ஏன் அப்படி...?

ஒரு மனிதனைப் போல் இன்னொருவன் இருப்பதில்லைதான். குணத்தாலோ உருவத்தாலோ அணுவளவேனும் மாறுபடுகிறான். இதனைக் கடவுள் நம்பிக்கை உள்ளவர்கள் "இறைவனின் படைப்பு" என்பார்கள். பகுத்தறிவாளர்கள் "இயற்கையின் சட்டம்" என்பார்கள். எது எப்படியிருந்தாலும் ஒருவரைப் போல மற்றொருவர் இல்லாமல் இருப்பதே சிறப்பு. மனித இனத்தின் தோற்றமும் வளர்ச்சியும் ஒரே அச்சில் வார்க்கப்படும் ஒரே மாதிரியான களிமண் பொம்மைகள் அல்லவே. (சொல்லிவிட்டுச் சிரிக்கிறார்).

✪ கடவுள் நம்பிக்கை என்பது பயத்தின் அடிப்படையில் உருவானதுதான் என்று ஒரு கருத்து உண்டு. இது பற்றி...?

மனித இனத்தின் தொடக்க காலத்தில் இந்தக் கருத்து ஓரளவுக்கு உண்மையாக இருந்திருக்கலாம். தனது கட்டுப்பாட்டைத் தாண்டிய பெரிய சக்திகளான பஞ்ச பூதங்களை மனிதன் வழிபட்டான். இது அச்சத்தின்

விளைவாக இருந்திருக்கலாம்.

ஆனால் கடவுளையே எதிர்த்து சண்டை போட மனித இனம் இப்போது தயாராகி உள்ளது. கடவுள் நம்பிக்கை என்பது பொருளைத் தேடுவதற்கு உதவும் நம்பிக்கை என்றாகிவிட்டது. உண்டியலில் போட்டால் அது பலமடங்காகக் கிடைக்கும் என்கிற நம்பிக்கையாகத்தான் கடவுள் நம்பிக்கை மாறிக்கொண்டிருக்கிறது. பரிகாரங்களும் சடங்குகளும் உளவியல் மேம்பாட்டிற்கான பக்தி நெறியைக் காட்டவில்லை.

கடவுள் நம்பிக்கை என்பது ஒரு அடையாளத்திற்குள் அடக்கிக் கொள்வது அல்ல. நம்மை ஒரு வடிவத்திற்குள் செம்மை செய்து கொள்வது. ஒரு பண்பாட்டிற்குள் அடையாளப்படுத்திக் கொள்வது.

ஆன்மீகம் என்பது, இந்த சமய நூலுக்கு உட்பட்டது; இந்த வரையறைகளை மட்டுமே பின்பற்றுவது; இந்த வழிபாட்டுக் கூடங்களுக்கு மட்டுமே உரியது; என்பதல்ல. ஆன்மீகம் என்பது உலக உயிர்க் குலத்தின் நன்மையை சிந்திப்பது; எந்தவித அடையாளங்களுக்கும் அப்பாற்பட்டது.

✪ "படிப்பு என்பது பணம் சம்பாதிப்பதற்காக மட்டுமே" என்பதாக இப்போதைய கல்வி முறை மாறிவருகிறதே...?

ஒரு காலத்தில் கல்வி என்பது எல்லோருக்கும் கிடைக்காததாக இருந்தது. குறிப்பிட்ட ஒரு சாராருக்கு மட்டுமே கிடைக்கக்கூடிய குருகுலக் கல்வி முறையாக இருந்தது. பிறகு ஆங்கில ஆட்சி வந்தபிறகு தனக்குத் தேவையானவர்களை உருவாக்குவதற்கான இயந்திரக் கல்வியாக இருந்தது. ஆனால் இப்போதைய கல்விமுறை என்பது, "தான் வருவாய் அதிகம் ஈட்டக்கூடிய இந்தப் பணிக்குத்தான் செல்ல வேண்டும்!" என்ற நோக்கத்தோடு கற்கப்படுகிறது.

இதில் தவறில்லை. ஆனால் அதுமட்டுமே குறிக்கோள் என்று கருதுதல் நல்லதல்ல. இந்த நிலைப்பாடு நல்ல முறைசார்ந்த மனிதர்களையும் மனிதத்தையும் உருவாக்கத் தவறிவிடுகிறது. முன்பெல்லாம் நல்லொழுக்கக்கல்விக்கு ஒரு வகுப்புண்டு. இப்போது இல்லை. இதனாலெல்லாம் நல்ல மனிதர்களை உருவாக்குவதில்

தோற்றுப் போகிறோம்.

முன்பெல்லாம் பள்ளிகளில் நடைபெறும் ஆண்டுவிழா போன்ற நிகழ்ச்சிகளில் இசைக்கத் தெரிந்தவர்களுக்கும் ஆடத் தெரிந்தவர்களுக்கும் பேசத் தெரிந்தவர்களுக்கும் போட்டிகள் வைத்து அவர்களிடம் உள்ள உண்மையான ஆற்றலைக் கண்டறிந்து அவர்களை அந்தந்த வழிகளில் ஊக்குவிப்பார்கள். இப்போதெல்லாம் ஒலிநாடாக்களைப் போட்டுவிட்டு அதற்கேற்ப இயந்திரங்களைப் போல ஆடுகிறார்கள். அதன் விளைவாக அவர்களின் உண்மையான ஆற்றல் வெளிப்படவும் சுய சிந்தனை உருவாகவும் வாய்ப்பில்லை.

✪ இந்தக் கல்விமுறையில் மாறுதல் வர வாய்ப்பு உண்டா...?

இதில் மாற்றம் வர சமவிகிதாச்சார கல்வியாக மாறுதல் செய்யப்பட வேண்டும். வெறும் விஷயங்களையும் நவீனத்துவங்களையும் மட்டுமே கற்றுக்கொடுக்காமல் மனிதத்துவத்தையும் கற்றுக்கொடுக்க வேண்டும். கணிப்பொறி படிக்கும் மாணவன் இலக்கியமும் படிக்க வேண்டும். இலக்கியம் அவனை வெறும் இயந்திர மனிதனாக இல்லாமல் மனிதம் நிறைந்த மனிதனாக மென்மை நிறைந்தவனாக மாற்ற உதவும். இலக்கியம்தான் என்றில்லை. வேறு துறைப்படிப்புகளும் படிப்பது நல்லது.

✪ முழுக்க முழுக்கப் படித்தவர்கள் நிறைந்த ஒரு நாட்டை முன்னேறிய நாடு என்று சொல்லலாமா...?

படித்துவிட்டதால் மட்டுமே ஒரு நாடு முன்னேறிவிட்டதாகச் சொல்ல முடியாது. ஒரு நாடு முன்னேறக் காரணம் படித்தவர்களா படிக்காதவர்களா என்று கணக்கிட்டால், எந்தவித பிரதிபலனும் அதிகம் எதிர்பார்க்காது விவசாயத்திற்காக உழைக்கும் படிக்காத மக்கள் பொருளாதார வளர்ச்சிக்கு பாடுபடும் அடித்தளத்து மக்கள் எண்ணிக்கை அதிகமாக இருக்கும்.

பெற்ற கல்வியறிவை முறையாக பயன்படுத்துகிற ஒரு சமூகம், தன்னை மட்டுமே வளர்த்துக்கொள்ள நினைக்காமல் தான் சார்ந்திருக்கும் சமூகத்தையும் இணைத்துக் கொண்டு வளரவேண்டும் என்று நினைக்கிற பரந்துபட்ட மனம் உடைய சமூகம், இவை இரண்டும் இணைந்து

வளர்ந்தால்தான் ஒரு நாடு முன்னேறிய நாடாக மாறும்.

✪ மனச்சாட்சி என்று எதை சொல்லலாம்...?

மனச்சாட்சி என்பது தன்னுடைய நிலைப்பாட்டின் சிந்தனை. மனசாட்சியைப் பற்றி கவலைப்பட்டால் குற்றம் குறைந்துவிடும். சட்டத்திற்குப் பயப்படுகிறவர்கள் பலர்; சமூகத்திற்குப் பயப்படுபவர்கள் சிலர். இதில் சட்டத்திற்குப் பயப்படுகிறவர்கள், திருடுவது குற்றமில்லை என்று சட்டம் திருத்தப்பட்டால் அவர்கள் திருடுவதை இயல்பான வாழ்க்கையாக எடுத்துக்கொள்வார்கள். சமூகத்திற்குப் பயப்படுபவர்கள் சமூகம் தெரிந்து கொள்ளாவகையில் தவறு செய்ய விரும்புவார்கள். மனச்சாட்சிக்குப் பயப்படுகிறவர்கள் தன்னைத்தானே திருத்திக் கொள்வார்கள். செய்கிற தவற்றை மாற்றிக் கொள்ள முயற்சிப்பார்கள். சிந்திப்பார்கள். குறைந்தபட்சம் கவலைப்படவாவது செய்வார்கள் அதுதான் மனச்சாட்சியின் இயல்பு.

✪ மனசாட்சி பற்றி அழகாகப் பதில் சொன்னீர்கள். இன்னும் ஒரு சந்தேகம். சிலர் கோவில் வழியாக சைக்கிளிலோ காரிலோ போகும் போது போகிற போக்கில் வணங்கிவிட்டுச் செல்கிறார்கள். சிலர் ஆலயங்களுக்குள் சென்று முறைப்படி வழிபடுகிறார்கள். இதில் யாருடைய வேண்டுதல் சித்திக்கும்....?

கடவுள் அங்கிங்கெனாதபடி எங்கும் இருக்கிறார். அவரவர் நம்பிக்கையின்படி இருக்கிறார். வழிபாடு என்பது நினைத்த நேரத்தில் மட்டுமல்ல. எப்போதும் வழிபாட்டு உணர்வோடு இருப்பது. நாம் போகிற பாதையில் வழிபடுவது என்பது நம் உணர்வுதான் அடிப்படை. எப்போதும் எங்கும் இறைவன் இருக்கிறான், என்ற உணர்வு இருந்துவிட்டால் வழிபாட்டிற்கான முழுமையான தேவைகள் கூட இருக்காது.

✪ இயல்பான குடும்ப வாழ்க்கையில் இருந்த நீங்கள் ஒருநாள் திடீரென்று ஒரு துறவியாக இந்த மடத்திற்கு...(தயக்கமாய்) கேட்கலாமா கூடாதா.... தெரியவில்லை...

(மென்மையாய்ச் சிரித்தபடி) கேளுங்கள்... கேளுங்கள்...

✪ அப்பா, அம்மா, உடன்பிறந்தவர்கள் என்று... பாசச்சூழலில் இளமைப்பருவத்தில் வாழ்ந்து கொண்டிருந்த நீங்கள் திடீரென்று

துறவியாக மாறியபிறகு உங்கள் மனநிலை எப்படி இருந்தது. குழப்பம்... சலனம் வந்ததா?

இல்லை. நாம் துறவறத்திற்குள்வர ஆயத்தப்படுத்தப்படவில்லையே தவிர இயல்பாகவே அந்த உணர்வோடுதான் வாழ்ந்திருக்கிறோம். நாம் பிறந்த ஊர் மதுரை என்பதால் படிக்கின்ற காலத்திலேயே அடிகளார் அவர்கள் மதுரைக்கு வரும்போதெல்லாம் அவர்களது கருத்துக்களைக் கேட்பதையும் சிந்தனைகளை மனதில் பதிந்து கொள்வதையும் வழக்கமாக கொண்டிருந்தோம். நிகழ்ச்சிகளில் அவர்களை சந்திக்கின்ற பொழுது அவர்கள் கேட்கின்ற கேள்விகளுக்கு நமது இயல்புக்கு ஏற்றவாறு பதிலளித்திருக்கிறோம்.

அதோடு நம்மிடமும் பெரிய தொழிலதிபராக வேண்டும், செல்வந்தராக வேண்டும் என்ற இளவயதுக்கே உரிய கனவுகளோ ஆசைகளோ இல்லை. எந்த ஒன்றைச் செய்தாலும் சமூகத்திற்கு பயன்படுகிற மாதிரி உண்மையான அக்கறையோடு நேர்மையாக செய்யவேண்டும் என்கிற மனநிலையே நம்மிடம் மேலோங்கி நின்றது.

இதையெல்லாம் கவனித்த மகாசந்நிதானம் அவர்கள் வெளியில் இருப்பதைவிட இவர் திருமடத்தில் இருப்பதே சரி என்று நினைத்து நம்மை மடத்திற்குள் அழைத்துக்கொண்டார்.

மடத்திற்குள் வந்ததும் நம்மிடம் நிகழ்ந்த மாற்றம் உடை மாற்றம் ஒன்று மட்டுமே. மேற்படி உள்ளத்தில் சலனமோ சஞ்சலமோ ஏற்பட்டதில்லை. ஏனெனில் மனசு ஏற்கனவே அந்த நிலைக்கு மாறிப்போயிருந்தது.

✪ தாங்கள் துறவு மேற்கொண்டதை தங்கள் இல்லத்தார் ஏற்றுக் கொண்டார்களா...?

எந்தக் குடும்பமும் தங்கள் மகனை ஒரு துறவியாக்கிப் பார்க்க சம்மதிப்பதில்லை. ஒரு மகனின் மரணத்தைக் கூட இயல்பாக ஏற்றுக் கொள்வார்கள். ஆனால் அவன் துறவியாவதை ஏற்க மாட்டார்கள். இல்லத்தார் குன்றக்குடிக்கு வந்து மீண்டும் வீட்டிற்கு அழைத்து செல்ல பெருமுயற்சி செய்தார்கள். இந்த வாழ்க்கையே ஏற்புடைய வாழ்க்கையென்று அவர்களை சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தோம்.

✪ தங்களின் கல்லூரிப் படிப்பு....

மதுரை யாதவா கல்லூரியில் பி.எஸ்.சி.இ வேதியியல் படிப்பு.

✪ பி.எஸ்.சி., என்பது உங்களின் விருப்பமா...?

(வாய்விட்டு சிரித்தபடி) இல்லை இல்லை... இன்று மாதிரி அன்று வேலைவாய்ப்பு அதிகம் கிடைக்கின்ற கல்விதான்.

✪ இலக்கியத்தில் எப்படி ஈடுபாடு வந்தது?

பள்ளியில் படிக்கின்ற காலத்தில் இலக்கியத்தில் மிகுந்த ஈடுபாடு உண்டு. தமிழை முழுமையாக எடுத்துப் படிக்கும் ஆர்வமும் இருந்தது.

அடிகளார் பெருந்தகை அவர்களின் பேச்சைக் கேட்டதின் மூலமும் பேசியதின் மூலமும் தமிழும் இலக்கியமும் பயின்றேன். மகாசன்னிதானம் அவர்களே நமக்கு குரு.

✪ திருக்குறள் பேரவையின் செயல்பாடுகள் பற்றி...

இப்போது உலகத்திருக்குறள் பேரவையாக மாவட்டம் முழுவதும் கிளைகள் அமைக்கப்பட்டு மாணவர்களுக்கு திருக்குறள் பற்றி பல்வேறு போட்டிகள் வைத்து குறள் படிக்கின்ற ஆர்வத்தை ஏற்படுத்தி வருகிறோம். இதனை எதிர்பார்ப்பில்லாத தலையாய பணியாக கருதுகிறோம்.

✪ அனைத்து சாதியினரும் அர்ச்சகராகலாம் என்பது பற்றி...?

நமது மகாசந்நிதானம் அவர்கள் 1972ல் சட்ட மேலவை உறுப்பினராக இருந்தபோது அனைத்து சாதியினரும் அர்ச்சகராகலாம் என்கிற சட்ட முன்வரைவை வரவேற்:று பேசியிருக்கிறார். இது ஒரு வரலாற்றுப் புதுமை. சைவ சமயம் சாதியை வலியுறுத்தவில்லை. சாதியற்ற சமுதாயத்தைத்தான் சைவ சமயம் வரவேற்கிறது. இதற்கான ஆதாரங்கள் சைவ சமய அருளாளர்கள் வழங்கிய திருமுறைகள். இவற்றில் 12ஆம் திருமுறையாகப் போற்றப்படும் பெரியபுராணம் முழுக்க முழுக்க சாதி வேறுபாடற்ற சமய வாழ்க்கைக்கு வழிகாட்டுகிறது. வேறு வேறு சாதிகளைச் சேர்ந்தவர்கள், வேறு வேறு தொழில்கள் செய்த 63 இறையடியார்களின் வரலாறு இவை புனையுரையல்ல. சமூகத்தின்

மேலே கீழே இடையே என்ற எல்லா அடுக்குகளையும் சேர்ந்த இவர்களின் திருவுருவங்கள் திருக்கோயில் வளாகங்களில் இடம்பெற்றுள்ளன.

எப்போதெல்லாம் நமது சமயம் நிறுவனமாக மாறுகிறதோ அப்போதெல்லாம் அந்த நிறுவனத்தை தன்வயப்படுத்தும் முயற்சியின் விளைவாக சாதி போன்ற நிகழ்வுகள் ஊடுருவுகின்றன. இதனால்தான்,

சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு
என் செய்குவீர்...?

என்று அப்பர் சுவாமிகள் கேட்கிறார்.

இப்படி சாதிகளற்ற சமயத்தைத்தான் நமது சாமிகள் அடையாளம் காட்டினார்கள். இந்தப் பார்வை நவீன காலத்திற்கேற்ப மக்களிடையே எடுத்து செல்ல பிறர் தயங்கியபோது "அருள்நெறித் திருக்கூட்டம்" என்ற அமைப்பின் மூலம் சாமிகள் முன்வந்தார்.

✪ அடிகளாரும் பெரியாரும் எந்தச் சூழலில் ஒன்று சேருகிறார்கள்..?

அருள்நெறித் திருக்கூட்டம் ஆன்மீகத்தை முழுமையாக தமிழகத்தில் வளர்க்க முயற்சித்தபோது அடிகளாருக்கும் பெரியாருக்கும் கருத்து மோதல் ஏற்பட்டது.

ஆன்மீகமா, பகுத்தறிவா என்று. மகாசந்நிதானம் குறிப்பிடும் ஆன்மீகம் என்பது இதுதான் என்று பெரியவரால் அடையாளம் கண்டுகொண்ட பிறகு அவர்களுக்குள் ஒரு சமரசம் ஏற்பட்டது. அது கருத்து சமரசம். கொள்கை சமரசம் அல்ல. கடவுள் இருக்கிறார் என்பது உங்களிடம். இல்லை என்பது எங்களிடம். ஆனால் இருவரின் இலக்கு மட்டும் ஓரிடம். இலக்கு என்பது மனித குல மேம்பாடு. அது இருவருக்கும் பொது. அந்த இலக்கு நோக்கி இருவேறு பாதைகளில் ஒத்த உணர்வோடு பயணம் செய்வதில் தவறில்லை என்று ஏற்றுக் கொண்டார்கள்.

மகாசந்நிதானம் அவர்கள் சமயத்தின் வழியே சாதி பேதமற்ற சமுதாயத்தை உருவாக்க முடியும் என்று பாடுபட்டார்கள்.

✪ தாய்மொழி கல்வி பற்றி தங்களின் கருத்து...?

தாய்மொழி என்பது தாய்ப்பாலைப் போன்றது. சுவாசிப்பது எப்படி இயல்பானதோ அப்படித்தான் தாய்மொழியில் பேசுவதும் எழுதுவதும் படிப்பதும். பிறமொழி வழியே கற்பது வேறு. பிற மொழியைக் கற்பது வேறு. பிறமொழி வழியே கற்காமல் தாய்மொழி வழியே கற்பதுதான் சிறந்தது. ஆக... கல்வி என்பது தாய்மொழிவழியாகத்தான் இருத்தல் வேண்டும். தொடர்புமொழியாக ஆங்கிலம் உட்பட எத்தனை மொழிகளை வேண்டுமானாலும் கற்கலாம்.

✪ **இத்தனை நேரம் எங்களுக்காக ஒதுக்கி நாங்கள் கேட்ட சந்தேகங்களுக்கெல்லாம் தெளிவாக விளக்கம் சொல்லி நிறைவு செய்தமைக்கு எங்கள் மனம் கொள்ளாத நன்றிகள்.**

எங்கள் குன்றக்குடி திருமடத்திற்கு தேடிவந்து எங்கள் கருத்துக்களை கேட்க நினைத்த உங்கள் உணர்வைப் போற்றிப் பாராட்டி வாழ்த்துகிறோம்.

நேர்காணல் : திரு. **உத்தமசோழன்**
ஆசிரியர், "கிழக்குவாசல்"

## மணமக்களை வாழ்த்துகின்றோம்

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தின் இனிய அன்பரும் மதுரை மொட்டைக் கோபுரம் மகாமுனீசுவரர் கோவில் பூசகருமான சிவத்திரு M.R. யாழ்கீத சுந்தரம்பிள்ளை - விநாயகத்தம்மாள் பெயரனும், சிவத்திரு யாழ்சுந்தரம் - கோமதி தம்பதியினரின் புதல்வனுமான திருவளர்செல்வன் **எஸ். ராஜாவுக்கும்** சென்னை திரு. கே. ஆறுமுகம் - ஏ. கனகசுந்தரி தம்பதியினரின் புதல்வியுமான திருவளர்செல்வி **ஏ. சுமதிக்கும் 5.12.2007 புதன்கிழமை** காலை 9.00 மணிக்கு மேல் 10.30 மணிக்குள் மதுரை, சீதாபுரம் குப்தா ஆடிட்டோரியம் திருமண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் எல்லா நலமும், வளமும் பெற்றுப் பல்லாண்டு வாழ்க, வாழ்க என்று "மக்கள் சிந்தனை" வாழ்த்தி மகிழ்கின்றது.

**- ஆசிரியர்**

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# திருக்கோயில் பூசனை எல்லாரும் செய்யலாமா? – ஓர் ஆய்வு

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

அடுத்து, திருஞான சம்பந்தர் தாம் குறிப்பிட்ட பயன் எனக்கண்டு வீழ்ந்து வணங்கிய கண்ணப்பர் வரலாறு, தக்க சான்று. கண்ணப்பர் வரலாற்றை "அதிதீவிரமரன வல்வினையின்பாற்பட்டதென்றும், அதனால் அது பொது விதியன்று" என்றும் சிலர் கூறுவர். அது உண்மையன்று. கண்ணப்பர்க்கு வழிபடுதலுக்குரிய வாய்ப்புக் கிடைத்ததால் பெருமானே திருக்கண் நோக்கால் தீக்கை (நயனதீக்கை) செய்து வைக்கும்[24] பெரும்பேறு பெற்றார். பிறகு வழிபாட்டின் பயனாகப் பெருகிய அன்பில் அவர் அதி தீவிரமானார். நாம் அவருக்குத் தடையின்றி வழிபடக் கிடைத்த வாய்ப்பையே இங்கு எடுத்துக்காட்ட விரும்புகின்றோம். கண்ணப்பர் திருக்கோயிலுக்குள் சென்று, திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள காளத்தியப்பரைத் தழுவி உச்சி மோந்தார். இந்த வாய்ப்பு அவருக்குக் கிடைக்காது போயிருக்குமாயின், அவரை "கண்ணப்பரா"கக் கண்டிருக்க இயலாது. திருக்காளத்திக் கோயிலில் சிவகோசரியார் என்னும் சிவாச்சாரியார் ஆகம விதிப்படி பூசை செய்தார் என்றும் சிவாசாரியார் ஆகம விதிப்படி பூசை செய்தார் என்றும் சேக்கிழார் கூறுகிறார்.[25] ஆனாலும், மற்றவர்கள் திருக்கோயிலுக்கு வந்து பூசனை செய்து கொள்வதற்குத் தடையில்லாதிருந்திருக்கிறது. மறுநாள் சிவகோசரியார் வந்து வருந்தும் பொழுது கூட, "பூசனை செய்தவர் யார்?" என்ற கேள்வி எழவில்லை. மற்றவர் பூசை செய்வதற்குரிய உரிமையில்லா திருக்குமாயின் சிவகோசரியார், பூசை செய்தவர் யார் என்று வினவித் தெரிந்து கொண்டிருப்பார். "இந்த அனுசிதம் கெட்டேன் யார் செய்தார்"[26] என்று மட்டும் கேட்டதால் மற்றவர் பூசை செய்வதற்குரிய உரிமை இருந்தது என்பது புலனாகிறது. சிவகோசரியார் தாம் பூசனை செய்வதற்கு முன்பு, இறைவர் திருமுன்பு எற்பட்டிருந்த பழுதுக்குத்தான் (புலால், எலும்பு கிடந்தமைக்குத்தான்) பவித்திர பூசை செய்தாரே தவிர, மற்றவர் தீண்டியதற்குரிய பிராயச்சித்தம் செய்ததாகப் பெரிய புராணத்தில் இல்லை. முடிவாக "விதி முறைப்படி செய்யப்பெற்ற சிவகோசரியார் பூசையைவிட, கண்ணப்பர் பூசை சிறப்புடையது, உவப்புடையது, நனிசிறந்தது"[27] என்று காளத்தியப்பர் அருளிச் செய்தமையை எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

ஆதலால் சிவாசாரியார்கள் திருக்கோயிலுக்குள் எழுந்தருளியிருக்கும் பெருமானை ஆன்மார்த்தமாகவும் வழிபடலாம்; பரார்த்தமாகவும் மற்றவர்களுக்குச் செய்விக்கலாம். திருக்கோயிலில் நாள் பூசையைச் சிவாசாரியார்கள் செய்து வைத்து, ஆன்மார்த்தமாக வழிபட வருபவர்களுக்கு வழிபாடு செய்துகொள்ளத் தக்கவாறு வைத்தலே, சிவாசாரியார்களுடைய கடமை. இக்கருத்தினைத் திருக்கோயிலுக்கு அமைந்துள்ள தலபுராணங்களும் வலியுறுத்துகின்றன. இராமன் பூசித்த திருத்தலங்கள் "திருஉசாத்தானம்"[28] முதலிய பல; பாண்டவர் ஐவர் பூசித்தவை "திருமண்ணிப் படிக்கரை" முதலிய பல; வாலி பூசித்தது "வாலீச்சுரம்" என்றெல்லாம் திருத்தல புராணங்கள் உள்ளன. இவ்வாறு இவர்கள் பூசித்த செய்திகள் திருமுறைகளில் இடம்பெற்றுள்ளன. இவை மட்டுமா? ஓரறிவுயிர்கள் முதல் ஐயறிவுயிர்கள் வரை பூசித்துள்ளன; திருவானைக்காவில் யானையும் சிலந்தியும் பூசித்துள்ளன. எறும்பு பூசித்த திருத்தலம் திருவெறும்பியூர். நண்டு பூசித்தவூர் திருநின்றவூர். பசு பூசித்த தலம் திருவான்மியூர். புள் பூசித்த திருத்தலம் புள்ளிருக்கு வேளூர். இவ்வாறு தல வரலாறுகள் இந்த உண்மையைக் கூறுகின்றன. இச்செய்திகளை வள்ளற் பெருமானும் எடுத்துக் கூறி நடத்துகிறார்[29]. எனவே தீக்கை பெற்றவர்கள் - தகுதியுடையவர்கள் - விரும்புகிறவர்கள் ஆன்மார்த்தமாகத் திருக்கோயிலுக்குள் எழுந்தருளியுள்ள இறைவனை வழிபாடு செய்து கொண்டனர் என்பதுதான் உண்மை. ஆதலால் நமது கருத்தினை அடியிற்கண்டவாறு தொகுத்துத் தருகின்றோம்.

1. பன்னிரு திருமுறைகளுக்கும், மெய்கண்ட சாத்திரங்களுக்கும் மாறுபாடில்லாத சிவாகமச் செய்திகள் ஏற்புடையன.
2. சைவ நெறியில் விதிக்கப் பெற்றுள்ள தீக்கை முறைகள் எவ்வித வேறுபாடுமின்றி அனைவருக்கும் உரியன. சைவ தீக்கை பெற்றவர்கள் ஒரு குலமாக - சைவ குலமாக - ஆகின்றனர். இந்த அடிப்படையில் தான் "ஒன்றே குலம்" என்று திருமந்திரம் பேசுகிறது.
3. தீக்கை பெற்றவர்கள் சிவாகமங்கள் ஓதவும், திருக்கோயிலில் அவர்கள் பெற்ற தீக்கைகளுக்கேற்றவாறு சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு வகை வழிபாடுகள் செய்வதற்கும் உரிமை பெற்றவர்களாவர்.
4. முறையாகத் தீக்கை முதலியன பெற்ற சிவாசாரியார்கள் திருக்கோயிலில் ஆன்மார்த்த பூசையும் பரார்த்த பூசையும்

செய்வதற்கு உரிமையுடையவர்கள்.

5. சைவ சமய தீக்கைகள் பெற்றவர்கள் அனைவரும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கிற மூர்த்தியை ஆன்மார்த்தமாக வழிபாடு செய்து கொள்வதற்கு உரிமையுடையவர்கள்.

6. பரார்த்தம் என்பதற்கு "பிறர் பொருட்டு" என்பது பொருளாயினும் பிறருக்காகச் சிவாசாரியாரே செய்தல் என்பது ஒரோ வழி ஏற்புடையதே தவிர, முழுமையானதன்று. திருக்கோயிலின் காலப் பூசைகளை முறையாக சிவாசாரியார்கள் செய்து, தகுதியுடையவர்கள் வந்தால் ஆன்மார்த்த பூசை செய்வதற்கு உடனாக இருந்து துணை செய்வது என்பதே பொருள். ஒரோவழி அங்ஙனம் ஆன்மார்த்த பூசையாகச் செய்து கொள்ள இயலாதவர்களுக்காகவும் இவர்கள் செய்து வைக்கலாம். வரலாற்றுச் செய்திகளுக்கும் சிவாகமத்திற்கும் திருமுறைகளுக்கும் ஒத்த நடைமுறைக்கிசைந்த உண்மை இதுவே.

7. இம்முறை, நடைமுறைப்படுத்தப் பெறுவதால் பிறப்பினால் சாதி முறை இல்லாமல் போகிறது. தகுதியால், ஆசாரத்தால், சீலத்தால் மட்டுமே வேற்றுமையிருக்கும்.

8. இம்முறையை நடைமுறைப் படுத்துவதன் மூலம், ஒவ்வொரு திருக்கோயிலிலும் எழுந்தருளியிருக்கும் இறைவனை, ஆன்மார்த்த நாயகனாகக் கொண்டு வழிபடுவோர் பட்டியல் உருவாகும். அது திருக்கோயில் வளர்ச்சிக்கும் துணை செய்யும். தகுதியும் விருப்பமும் உடையவர்கள், வழிபாடு செய்துகொள்வதற்கு வாய்ப்பிருந்தால், அவர்கள் பத்திமையிலும் ஞானத்திலும் சிறந்து வளர்வர். இதுவே இன்றைக்குச் சரியான முறை என்று கருதுகின்றோம்.

9. அல்லது அரசு தீவிரமாக மாற்றங்கள் செய்ய விரும்புமாயின் அது பற்றியும் ஆலோசிக்கலாம். ஆனாலும் ஒரு சமயச் சார்பற்ற அரசு, ஒரு சமயத்தில் நேரிடையாகச் சீர்திருத்தம் செய்யப்புகுவது வரவேற்கத் தக்க தன்று. நல்லூழ் இன்மையின் காரணமாக, நம் சமயத் தலைவர்கள் தம்முள் மாறுபாடு கொண்டும் ஒத்துணர்வில்லாமலும் இருப்பதாலும் திருக்கோயில் பேணல், சமய நெறிபேணல், அவற்றை வளர்த்தல், காலத்திற்குத் தேவையான புதுமை நெறி காணல் ஆகியன பற்றி ஒருங்கிணைந்து சித்திக்காததாலும், சிந்தித்து வழி நடத்தாததாலும் காலத்தின் தேவைகள் நெருக்குவதால் முறையான வழிகாட்டுதலின்றிச் சமுதாயம் தன் போக்கில் செல்கிறது. அரசு அதற்கேற்றவாறு சமுதாயத் தேவைகளை நிறைவு செய்யவும், சீர்திருத்தங்களைச் செய்யவும் அவாவுகிறது. அரசு நம்முடைய சமயத்

தலைவர்களையும் சமய அறிஞர்களையும் கொண்ட தக்க மாநாடுகளைக் கூட்டி, நன்றாகச் சிந்தித்து முறையாகச் சீர்திருத்தம் செய்வது வரவேற்கத்தக்கது; ஏற்புடையதும்ஆகும்.

தமிழகத் திருக்கோயில்களில் காலத்திற்குத் தேவையான மாறுதல் ஏற்பட்டு வந்துள்ளதைத் திருக்கோயில்களின் நடைமுறைகளும் உணர்த்துகின்றன; வரலாறுகளும் உணர்த்துகின்றன. பல சிவாலயங்களில், சிவாசாரிய மரபினர் அல்லாதவர்களும், சிவாகம முறைப்படி, தீக்கை முதலியன பெறாதவர்களும் கூட, அமர்த்தப்பெற்றுள்ளனர். சான்றாக, திருவானைக்கா, திருப்பெருந்துறை, சிதம்பரம், இராமேச்சுரம், திருச்செந்தூர் ஆகிய திருத்தலங்களைக் குறிப்பிடலாம். ஏன்? ஆகமத்தில் உயிர்ப்பலியிடுதல் சொல்லப்பெறுகிறது. ஆனால், அரசின், உயிர்ப்பலித் தடைச் சட்டம் அதனைத் தடுத்து விடவில்லையா? திருக்கோயில்களுக்குள் தாழ்த்தப்பட்டவர்கள் வரக்கூடாதென்பது ஆகமத்தின் விதி. ஆனால் மெய்கண்ட சாத்திரங்களும் திருமுறைகளும் இதை மாற்றித் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் உரிமை வழங்கியுள்ளன. அப்பரடிகள் அருள் வாக்கு[30] நினைக்கத்தக்கது. இக்கருத்தை அரண் செய்யும் வகையில் மாதவச் சிவஞான முனிவர் அருளிய வாக்கும்[31] எண்ணத்தக்கது. பெற்றான் சாம்பானுக்குத் தீக்கை செய்த உமாபதி சிவத்தின் அருளிப் பாடும் நினைக்கத் தக்கது. ஆயினும் உழுதசால் வழிச் செல்லும் நம்மவர்கள் திருமுறை நெறியையும் மெய்கண்ட நெறியையும் ஏற்று நடைமுறைப்படுத்தவில்லை. ஆதலால் நமது சுதந்திர இந்திய அரசு, ஆலயப் பிரவேசச் சட்டம் செய்தது. இது சிவாகமங்களுக்கு விரோதமானதுதான். இதனை நாம் ஏற்காமல் இல்லை. இங்ஙனம் தாழ்த்தப்பெற்றவர்கள் திருக்கோயிலுக்கு வந்ததால் – "திருவருள் பொலிவு (சாந்நித்யம்) குறைந்து இருக்கிறது" என்று சிலர் கூறுவது சரியன்று. இறைவன் எஞ்சாத பூரணம்; குறைவிலா நிறைவு; கோதிலா அமுது. அதற்கு எப்படிக் குறை வரமுடியும்? இது சொல்வாருடைய மனப்போக்கின் கருத்தேயாம். சாதாரணக் காவிரியே, தூய்மையற்றவைகளையும் தூய்மையாக்கிக் கொள்ளும் பொழுது, இறைவனைத் தாழ்த்தப்பட்டவர்கள் தொடுவதால் திருவருட் பொலிவு குறையாது. அப்படிச் சொல்லுபவர்கள் கடவுள் தத்துவத்தை முற்றாக அறிந்தவர்கள் ஆகமாட்டார்கள். புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பாடல் இங்கு நினைவு கூரத்தக்கது.[32] எந்த வகையிலும் நமது சமுதாயத்தில் பிறப்பின் காரணமாக உயர்வு தாழ்வுகளைக் கற்பிப்பதும் ஒரு சாராரை இழிவுபடுத்துவதும், மற்ற மதங்களுக்கு அனுப்பிவைக்கும் கொடுமையும் உடனடியாகத் தவிர்க்கப்பட வேண்டும்.

"மெய்வைத்த சொல்" என்றும் "மறை" என்றும் பாராட்டப்பெறும் திருக்குறள் கூறும் பொதுநெறி[33] காணல் இந்த நூற்றாண்டின் கடமை.

ஆதலால், இன்றைய நிலையில் அரசு ஒரு தக்க சமய வளர்ச்சிக் கருத்தரங்கு மாநாட்டைக் கூட்டி, மேலும் சரியான முறையில் இச்செய்தியை அணுகி திருமுறைகளுக்கும், மெய்கண்ட சாத்திரங்களுக்கும், சிவாகமங்களுக்கும் முரணில்லாமல் சிந்தித்துக் கருத்தாய்வு செய்து செயல்படுத்துவது தவறாகாது.

அங்ஙனம் நினைக்கும்பொழுது வழி வழியாக பூசை செய்துவரும் சிவாசாரியார்களைக் கவனத்தில் கொண்டு அவர்களுக்குரிய முன்னுரிமையையும் தரும்படி செய்வது சமுதாயப் பாங்கான கடமையாகும்.

### இக்கட்டுரையில் வரும் எண்களுக்குரிய விளக்கங்கள்

24. *திங்கள் சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணாமுன்னே*
*அங்கணர் கருணைகூர்ந்த அருள் திருநோக்கம் எய்தத்*
*தங்கிய பவத்தின் முன்னைச் சார்பு விட்டகல நீங்கிப்*
*பொங்கிய ஒளியின் நீழல் பொருவில் அன் புருவமானார்*

(பெரிய புரா.753)

25. *எய்தியசீர் ஆகமத்தில் இயம்பிய பூசனைக் கேற்பக்*
*கொய்த மலரும் புனலும் முதலான கொண்டணைந்தார்*
*மைதழையும் கண்டத்து மலைமருந்தை வழிபாடு*
*செய்துவரும் தவமுடைய முனிவர் சிவகோசரியார்.*

(பெரிய புரா.784)

26. *வந்து திருமலையின்கண் வானவர் நாயகர் மருங்கு*
*சிந்தை நியமத்தோடும் செல்கின்றார் திருமுன்பு*
*வெந்த இறைச்சியும் எலும்பும் கண்டு அகலமிதித்தோடி*
*"இந்த அனுசிதம் கெட்டேன் யார்செய்தார்" என்றழிவார்.*

(பெரிய புரா.785

27. *"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்*
*அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்*
*அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாம் என்றும்*
*அவனுடைய நிலை இவ்வாறறிநீ" என்றருள் செய்தார்.*

(பெரிய புரா.806)

28. நீரிடைத் துயின்றவன் தம்பிநீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீவன் அனுமன் தொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தஎம்
சீருடை சேடர்வாழ் திருவுசாத் தானமே.

(திருமுறை.3.33.திருவுசாத்தானம்)

29. ஆடும் கரியும் அணிலும் குரங்கும் அன்பு
தேடும் சிலம்பியொடு சிற்றெறும்பும் - நீடுகின்ற
பாம்பும் சிவார்ச்சனைதான் பண்ணியதென் றாற்பூசை
ஓம்புதற் கியார்தான் உவவாதார்.

(திருவருட்பா, நெஞ்சறிவுறுத்தல்.கண்ணி.257-259)

30. ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடையக்கரந்தார்க்கு அன்பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே??

(ஆறாம் திருமுறை.938)

31. சிவனெனும் மொழியைக் கொடிய சண்டாளன்
செப்பிடின் அவனுடன் உறைக;
அவனொடு கலந்து பேசுக; அவனொடு
அருகிருந் துண்ணுக என்னும்
உவ்மையில் சுருதிப் பொருள்தனை நம்பா
ஊமரோ டுடன்பயில் கொடியோன்
சிவனெனக் கழித்தால் ஐயனே கதிவே
றெனக்கிலை கலைசை யாண்டகையே.

(கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதி)

32. தாழ்ந்தவர் வந்திடில் நன்றுயிர் போமெனில்
சாமிக்குச் சத்திலையோ? - எனில்
வீழ்ந்த குலத்தினை மேற்குலமாக்கிட
மேலும் சமர்த்திலையோ?

(பாரதிதாசன் கவிதைகள், சமத்14)

33. பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

(குறள்)

("ஆலயங்கள் சமுதாய மையங்கள்" என்னும் நூலிலிருந்து)

(முற்றும்)

# அருளாலய பத்துறுப்பு (தசாங்கம்)

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி)

1. அருளா லயத்தின் அருமைக் கிளியே!
அருளாட்சி அண்ணல் அடிகள் - அருட்பேரென்?
**"தெய்வ சிகாமணி தேசிகர்"** நம்மையெல்லாம்
உய்விக்க உற்ற பெயர்.

2. வளரரு ளாலய வண்ணக் கிளியே!
தளர்வில் தமிழண்ணல் நாடென்? - கிளர்புகழ்
தென்றலோடு தீந்தமிழ் தோன்றிவளர் செம்மொழி
மன்றல் மணக்கு**தமிழ் நாடு.**

3. பைங்கிளியே! பார்புகழ் பைந்தமிழ் மாமுனியாம்
ஐங்கோயில் அண்ணல் பிறந்தூரென்? - தங்குபுகழ்
முத்துக் குமரன்வாழ் வைத்தீ சுரன்கோயில்
சொத்துசூழ் **ஊர்நடுத் திட்டு.**

4. அஞ்சுகமே! ஆன்றரு ளாட்சி அடிகட்கு
விஞ்சுபுகழ் மாமலையின் பேர்விளம்பு? - மஞ்சுதவழ்
அண்ணா மலையதனோடு ஆதீனப் பேர்கொள்ளும்
கண்ணார்சீர் **குன்றக் குடி.**

5. அருளாட்சிப் பேரரசர் ஆணைஎன் என்றே
தெருளில் கிளியே! தெரிவி! - மருளில்லா
ஆன்மீகக் கொள்கைப் பிடிப்பின் உறைப்பான
வானுரையே **ஆணை வரம்பு.**

6. பெண்ணார் கிளியே! பெரும்புகழ் ஆதீனக்
கண்ணார் அருளரசர் ஆறுரை? - தண்ணார்ந்த
நற்றமிழ் நால்வர் அடிச்சுவடே அன்னவரின்
உற்றபேர் ஆறாம் வழி.

7. எழிலார் கிளியே! இறையாண்மை கொண்ட
அழிவில் அருளா லயர்க்குக் - கழிநெடில்
போல்நீண்ட தேரெது? பொன்னம் பலரிழுக்கும்
கோல்தமிழ் தேரேநற் றேர்.

8. அருளாட்சி மாமன்னர் ஆசிகொள் தத்தாய்!
இருளாட்சி நீக்கும் இனிய - பொருளாட்சி
மிக்கவரின் தேரில் மிடையும் கொடியெது!
தக்கஓம் காவிக் கொடி.

9. பச்சைக் கிளியே! பசுந்தமிழ் சித்தாந்த
இச்சை அரசர் முரசியம்பு - மெச்சுபுகழ்
நாவரசர் கொள்கையை நாளும் முழக்குகின்ற
நாவேதான் நல்ல முரசு.

10. கோலக் கிளியே! குமரன் குடிக்கோயில்
சீலத் திருமார்பின் மாலையெது? - சால
சமயத் தமிழோடு சங்கத் தமிழ்ப்பா
சமைந்திட்ட தார்மாலை யாம்.

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# அருட்திரு பாம்பன் சுவாமிகள் அருளிய திருக்குன்றக்குடிப்பதிகம் – உரை

(சைவத்தமிழ்மணி.வித்துவான். க. கதிரேசன்)
(குன்றக்குடி ஆதீனப் புலவர்)

ஆதிஅ நாதியும் நீயாய் அண்டகோ டிளங்கும் நீயாய்த்
தீதில்உ யிர்க்(கு)உயிர் நீயாய்த் திகழ்ஒரு பூரணம்தன்னை
மேதினி உள்கு வாரே விஞ்(சு)அள(வு) ஆக்கம்உள் ளோர்கள்
கோதில்வெ யில்அயில் கோவே குன்றக் குடியுறை தேவே.

## கூட்டுமுறை

கோதில்....தேவே; ஆதி... பூரணம் தன்னை, உள்குவாரே மேதினிமீது விஞ்சு.... உள்ளோர்கள்.... உன்னையே உள்கும் நிலையை எனக்கும் அருள்க என்று வருவித்துக் கூட்டி முடிக்க.

## குறிப்புரை

ஆதி=கால எல்லைக்குட்பட்ட பழைமை. அநாதி = கால எல்லைக் குட்படாத பழைமை. அண்டகோடி=அண்டவெளியிலுள்ள கோடிக் கணக்கான உலகுகள். தீதுஇல்=இறப்பில்லாத, ஒரு=ஒப்பற்ற. பூரணம் = நிறைவு – நிறைவாய் உள்ள பொருள். விஞ்சு=மேலான. அறிவு = ஞானம்./ ஆக்கம்=உயர்வு. விஞ்சு அளவு, விஞ்சு ஆக்கம் என்று தனித்தனி கூட்டிப் பொருள் கொள்க. கோதுஇல்வெயில்=குற்றமற்ற ஒளி. அயில்=வேல் – ஞானத்தின் குறியீடு.

## பொழிப்புரை

குற்றமற்ற ஒளிவீசும் ஞானத்தின் குறியீடான வேல் ஏந்திய கோவே; குன்றக்குடியுறை தேவே; கால எல்லைக்குட்பட்ட பழம்பொருளும், கால எல்லைக்குட்படாத பழம்பொருளும் நீயேயாய்; அண்ட வெளியிலுள்ள கோடிக்கணக்கான உலகுகள் அனைத்தும் நீயேயாய்; இறப்பில்லாத உயிர்க்கு உயிர் நீயேயாய்த் திகழும் ஒப்பற்ற நிறைவான உன்னை நினைக்கின்றவரே. இவ்வுலகில் மேலான ஞானமும் உயர்வும் உள்ளவர்கள், உன்னையே நினைக்கின்ற பேற்றை எனக்கும் அருள்க.

**விளக்கம்**

இறைவனின் அநாதிநிலையாவது அம்மையைத் தன்னுள் ஒடுக்கி நிற்கும் பரநிலை – ஞானநிலை.

இறைவனின் ஆதிநிலையாவது ஐந்தொழில் புரிய அம்மையைத் தன் இடப்பாகம் கொண்ட அம்மையப்பர் நிலை. இந்த ஆதிநிலையை வாதவூரடிகள்.

"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்கவளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய் கோத்தும்பி"

– திருக்கோத்தும்பி.18

என்று போற்றுகிறார். இதனை இவர் "தொன்மைக்கோலம்" என்பது நினைக.

ஆதி, அநாதி நிலைகளை மாணிக்கவாசகரே

"1 முன்னைப் பழம்பொருட்கும் 2முன்னைப் பழம்பொருளே" என்று சுருங்கவும் கூறுகிறார்.

1. முன்னைப் பழம்பொருள் – ஆதிநிலை – தொன்மைக்கோலம்.
2. முன்னைப் பழம் பொருள் – அநாதிநிலை – ஞானவடிவம்.

அண்டவெளியிலுள்ள கோடிக்கணக்கான உலகங்களை அடிகள், "அண்டகோடி" என்றார். இதன் தன்மையை வாதவூரடிகள்,

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பரும் கோடி வளப்படும் காட்சி"

– திருவண்ட...1-2

உருண்டை என்பது உண்டை என்று மருவியது, பிறக்கம்=தொகுதி.

அண்டப் பகுதியில் உலகுகள் உருண்டையாகி உள்ளன, தொகுதிகளாக உள்ளன, அளவின்றிக் கோடி கோடியாக உள்ளன. வளமான பெருந்தோற்றமுடையன என்ற இன்றைய விண்வெளியியலார் கருத்தை உட்கொண்ட பகுதி இது. இச்செய்தி, மிகச் சுருக்கமாக அடிகளால் "அண்டகோடி" எனப்பெற்றது.

"நீ எதனைச் சதாநினைத்துக் காண்டிருக்கிறாயோ அதுவாகவே ஆகிறாய்" என்பது உளவியல். ஞானமயனாகவும் மீஉயர்

நிலையினனாகவும் உள்ள இறைவனை நினைப்பவர் அவனது இவ்விரு நிலைகளையும் பெறுவர் என்பதை "உள்குவாரே விஞ்சு அறிவு ஆக்கம் உள்ளோர்கள்" என்றார்.

இறைவனின் இருப்புக்குப் பேரெல்லை ஓரளவு காணத்தக்க அண்ட கோடி. மீச்சிற்றெல்லை கண்ணால் காண இயலா உயிர் என்று கூறி அவனது அளவிலாற்றல் உணர்த்தினார்.

உலக ஒளிப்பொருள்கள் யாவும் காணக்கண் கூசுவன, தொட அல்லது நெருங்கச் சுடுவன, வெப்பமும், புகையும் இறுதியும் முதலிய குற்றங்களில் சிலவோ பலவோவுடையன. ஆனால் குன்றக்குடியானின் உடம்பிடியாகிய வேல் ஓங்கி ஆழ்ந்து அகன்று நுண்ணியது மட்டுமன்றி, ஒளிப்பொருட்கட்குக் குறித்த குற்றங்கள் ஏதும் இல்லாதது. ஆதலின் அது "கோதில்வெயில் அயில்" எனப்பெற்றது.

**இலக்கணக்குறிப்பு**

ஆதி அநாதியும் - உம்மைத் தொகை. அநாதியும் - இறந்தது தழுவிய எச்சவும்மை. திகழ்ஒருபூரணம் - வினைத்தொகை.

பூரணம் - பண்பாகு பெயர். அறிவுஆக்கம் - உம்மைத் தொகைகள்.

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

*- ஆசிரியர்*

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
# பழநி

## பரிமள விலாஸ்

# S. சித்தனாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**
**அடிவாரம், பழநி – 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

M .KKAL CHINTHANAI - December 2007 Price Rs. 5-00
Date of Publication 20-12-2007
Register of News Paper for India No. 35313/81 Register No. TN/SR-266/2006-2008



பெறுநர்

திரு




அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166